தொடங்கும்படி டைம்ஸ் பத்திரிகை எவிற்று. இப் பத்திரிகையைப் படிக்கும் ஆங்கிலோ—இந்தியர்கள் மனதுக்கு பெருத்த பயமுண்டாயிற்று. இக்கொலை கள் பெருங்கலகத்துக்கு பீடிகை யென்றும், பூனாவில் பிராமணர்களுக்குள் சதியோசனைபலமாயிருக்கிறதென் றும் அவர்கள் பிசகாய் நம்பிவிட்டார்கள். டைம்ஸ் சொன்னதை ரிஷிவாக்கியமாகக் கொண்ட பம்பாய் கேஜட் இதைப் பிரமாதப்படுத்தி எழுதிவிட்டது. இங்கிலாந்து டைம்ஸ் பத்திரிகை இவைகளைப் பார்த்து விட்டு தன்னால் கூடியமட்டும் மும்மரமாய் எழுதிவிட் டது. இதுசீமையில் பிரபலமான பத்திரிகை. இதில் பிரசுரிக்கப்படும் விஷயம் எல்லாராலும் படிக்கப்படுகி ன்றன. இதைப்படித்த ஆங்கிலேயர்கள் பூனாவில் பெ ருங் கலகமென்றே நம்பிவிட்டார்கள். பார்லிமெண்ட் மெம்பராகிய பார்ட்லட் என்பவர் இந்தியா காரியதரிசி யை, திலகரென்பவர், ஆள்பவர்களாகிய பிரிடிஷார்மேல் குற்றம் சுமத்தி எழுதியிருப்பவைகளுக்கும், துரைத் தனத்தார்மேல் ஜனங்கள் மனதில் துவேஷமுண்டாக் க்கும்படி பேசியிருக்கும் பேச்சுகளுக்கும் அவரை என் னசெய்யப்போகிறீர் என்ற கேள்வியைக்கேட்டார். இவ்வளவுக்கும் காரணம் உண்மையறியாத ஆங்கிலோ இந்தியர்களும், அவர்கள் நடத்தும் பத்திரிகைகளும்.

பம்பாய்துரைத்தனத்தார் திலகர்மேல் குற்றம் சாட்டி அவரை விசாரணைக்குக்கொண்டுவர 26உ உத்திரவுசெய்தார்கள். சிப்ப்ரீசண்டிசி மேஜிஸ்ரேட் சாண்டர் ஸ்லேடர் முன்பாக பேயீக் திலகர்கேஸைக்கொண்டுவந்தார். வாரண்டுக் குத்தரவாயிற்று 27-ஆம்தேதி இரவில் திலகர் பிடிக்கப்பட்டு மறுநாள் மாஜிஸ்கிரேட்முன் ஆஜரானர். அவரை ஜாமீன்மேல்விட மாஜிஸ்திரேட்டிடம் மனுசெய்து கொள்ளப்பட்டது. இந்தமனுவை சர்க்கார் வக்கீல் எதிர்த்துப் பேச மனு தள்ளிவிடப்பட்டது. ஹைகோர்ட்டார் முன் 29-ஆம் தேதி மனுகொடுக்கப்பட்டது. அது எடுத்துக்கொள்ளப்படவில்லை. மறுபடியும் ஹைகோர்ட் ஜஸ்டிஸ் டியாப்ஜியிடம் மனு செய்துகொண்டதில், சர்க்கார்வக்கீல் இதற்கு எதிர்த்துப்பேசியும், அவர் தக்கமுகாந்தரங்கள்காட்டி திலகரை 50,000 ரு ஜாமீன் பெற்றுக்கொண்டு விட்டார்.

செப்டம்பர்மீ 8-ஆம் தேதி விசாரணை ஆரம்பமாய் ஒருவாரம் கேஸ்நடந்தது. கல்கத்தாவில் பேர்போன பாரிஸ்டர் மிஸ்டர் ப்யூ (Pugh) திலகர்பக்ஷம் வக்கிலாக ஆஜரானர். அட்வொகேட் ஜனரல் ஆனரபில் பேசில்லேங் சர்க்கார் தரப்பில ஆஜரானர். ஜஸ்

டிஸ் ஸ்டேரேகியால் விசாரிக்கப்பட்டது. ஜூரிகளாகத் தேர்ந்தெடுக்கப்பட்டவர்களில் ஐரோப்பிய கிரிஸ்தவர்கள் 5, ஐரோப்பிய யூதர் 1, இந்துக்கள் 2, பாரசி 1, ஐரோப்பியர்கள் அறுவரும் குற்றவாளியென்று திலகரைச் சொன்னார்கள். மூன்று பெயர்கள் குற்றவாளியல்லவென்றார்கள். ஜட்ஜ் பெரும்பான்மையார் கூறியபடி குற்றவாளியென்று திலகரை 18 மாதம் காவல் தண்டனைக்குள்ளாக்கினார். தீர்ப்பு 14ந்தேதியன்று சொல்லப்பட்டது. இதில் ஸ்ட்ரேகிகூட பொது நன்மைக்காக அவர் உழைத்த உழைப்புகளைப் பற்றி மெச்சுகிறார்.

இத்தீர்ப்பைப்பற்றி இந்தியர்களால் நடத்தப்பெறும் பக்திரிகைளும், ஆங்கிலோ-இந்தியர்களால் நடத்தப்பெறும் பத்திரிகைகளில் கல்கத்தா ஸ்டேட்ஸ்மான், மதராஸ் டைம்ஸ், இன்னும் இரண்டொரு பத்திரிகைகளும் விசனித்து சரியானதல்லவென்றன. கல்கத்தா இங்கிலீஷ்மான், பயோனியர், மதராஸ் மெயில், பம்பாய் டைம்ஸ் ஆப் இந்தியாப் பத்திரிகைகள் தீர்ப்பு கிரமமானதென்று சந்தோஷப்பட்டன.

தீர்மானம் ரத்தாகும்படி இங்கிலாந்திலுள்ள பிரிவி கௌன்சிலுக்கு அப்பீல் செய்யப்பட்டது. லார்ட்

சான்சலர், லார்ட் ஆப் அவுஸ், லாட் டேவி, ச்ரிச் சர்ட்கவுச் இவர்கள் முன் திலகர் பக்ஷம் ஆஜராயிருந்த மிஸ்டர் ஆஸ்குவித், மிஸ்டர் ஜே. டி. மெயின், மிஸ்டர் பானர்ஜி, மிஸ்டர் பிளேர் இவர்கள் அப்பீல் மனுவைக் கொடுத்தார்கள். அதில் என்ன சொல்லப்பட்டதென்றால், வாதிகள் குற்றம் சாட்டும்பொழுது எந்த வார்த்தைகள் குற்றமானவையென்று காட்டாம லிருந்துவிட்டார்க ளென்றும், ஜஸ்டிஸ் ஸ்டேரேசி ஜூரிகளின் மனதைக் கலவரப்படுத்திக் கெடுத்துவிட்டாரென்றும். சர்க்கார் தரப்பில் மிஸ்டர் கோஹன், மிஸ்டர் ஸ்பிரிங்ப்ரேன்சன் ஆஜரானார்கள். சான்சலர் லார்ட் சால்ஸ்பரி சமாசாரங்களை சொல்லியறியாமலே அப்பீலை ஒத்துக்கொள்ளப்படமாட்டாதென்பதாகச் சுருக்கமாகத் தீர்மானம் சொல்லிவிட்டார்.

இத்தீர்ப்பைப்பற்றி நம் சென்னைப் பத்திரிகைகளாகிய டைம்சும், ஹிந்துவும் பின்வருமாறு எழுதின,

'பிரிவி கவுன்ஸிலில் தீர்மானம் ஊர்ஜிதமான வழியை முழுவதும், நாங்கள் இகழ்கிறோம்.' டைம்ஸ். 'ஜுபிலி' இரவில் இரண்டு ஆங்கிலேய உத்தியோகஸ்தர்கள் கொலையுண்ட பழியைத் தீர்க்க, குற்றமற்றவரும்,

இராஜ விசுவாசமுள்ளவரும், மேன்மையான மனதை யுடையவருமான ஒரு மனிதர் பலியாக்கப்பட்டாரெ ன்று சர்வத்திராளும் கொண்டிருக்கும் நம்பிக்கையை பிரிவி கௌன்சில் மாற்றமுடியாது.'

ஹிந்து நவம்பர் 22 1897.

திலகரின் இல்லற வாழ்வு.—பேதமை யென்பது இதுதான் என்றதை பிரத்யக்ஷமாய் அறிய விரும்புவோர் அவரிடம் அறிந்துகொள்ளலாம். எல்லா காலங்களிலும், வைதிக பிராமணரின் சாதாரண உடையன்றி வேறொன்றையும் தரிப்பதில்லை. படித்த இந்தியர்களிடம் சாதாரணமாய் காணக்கூடும் குற்றங்குறைகள் அவரிடத்தில் கிடையவேகிடையாது. அவரின் ஜன்மப் பகையாளிகள்கூட அவரிடம் ஒழுங்கீன மொன்றைச் சுட்டிக்காட்ட முடியாது. இளையோருக்கும் முதியோருக்கும், செல்வருக்கும் வறியருக்கும், உயர்ந்தோருக்கும் தாழ்ந்தோருக்கும், எல்லோருக்கும் திலகர் சரசமானவரும், கபடமற்றவரும், அனுதாப முடையவருமான நேசரே. அவரின் அடங்கிப மாதிரியும் விலகியிருக்கும் சுபாவமும், அவரிடம் நன்ருய் பழகாதவர்கள் அவரைத்தப்பப்பிராயம் கொள்ள இடமாயிருக்கின்றன. பொய்

விருந்தாந்தத்துக்கும், பழிச்சொல்லுக்கும் பலியொரு வரைக் காட்டவேண்டுமென்றால் திலகரைக் காட்ட லாம். அவர் தம்மைப்பற்றியவைகளை ஆக்ஷேபித்து தம் நிலைமையை உறுதிப்படுத்துவதில்லை. இதனால் அவரிடம் 'நான்'என்பதுபாவனையிலில்லை. அவரின் பிர மாணம்: 'கடமையைச்செய்வது.'அவரைப்பற்றிஎன்ன சொல்லப்பட்டாலும் சொல்லப்படட்டும். அதினின்று ம் அப்புறம்இப்புறம் விலகினவரல்ல. அவர் தக்ஷணகல் விச் சங்கத்தினின்று விலகிக்கொண்டாரேனும் பிறகு அதைப்பற்றி தூஷிதமாகவாவது, அதைக்கெடுக்கவாவ துபேசினவருமல்ல, செய்தவருமல்ல. அவரின் பெருந் தன்மையான குணம் கஷ்டத்திலிருப்பவர்களுக்கு உத வுவதே. சில மம்லத்தர்கள் க்ராபர்ட் கேசால் கஷ்டத் துக்காளாக, அவர்கள் இவரை நாடினார்கள். இவர் வாதாடி. கடைசியாக லார்ட் ரே காலத்தில் அவர்கள் சேவகத்துக்கு ஏதோ கைமாறு வாங்கிக்கொடுத்தார். பரோடாவைச்சேர்ந்த பாபத் என்பவர் லஞ்சக்கேசில் சிக்கிக்கொண்டு உதவுபவர் ஒருவருமில்லாது திகைக் கையில் திலகர் அவருக்காக உழைத்து அவரை மீட்டு வைத்தார். பரோடா சமஸ்தானத்துக்கிருந்த இரக சியமான அபாயத்தைப் போக்கிக் காத்தார்.

இந்த உழைப்புகளுக்கெல்லாம் அவருக்கு எதாவ்து கைம்மாறுண்டோ? இல்லை. இத்தகைய அநேக காரியங்கள் செய்திருக்கிறார். ஆனால் அவருக்கு அவைகளால் ஒரு தம்பிடியாவது லாபமுண்டோ? இவைகளில் சுயப்பிரயோஜனத்தைக் கருதாதிருப்பதையே அவரின் விரோதிகள் எடுத்துக்கொண்டு அவர் இழிவான நோக்கமுடையவர் என்ற அபவாதத்தை அவர்மேல் சுமத்துகிறார்கள். அவரிடத்தில் குற்றங்களிருக்கலாம். மனிதன்தானே! இவைகள் அவரிடமிருக்கும் அனேக நற்குணங்களால் உண்டாகின்றன. அவர் முன்கோபி, சர்வ நம்பிக்கை கொண்டவர், அதிதயாளமானவர். இக்குணங்கள் இந்த உலகத்துக்கும் காலத்துக்கும் சரியானவையல்ல. சுருங்கச் சொல்லின் மராட்டியரின் அவதாரம். சாஹசசுபாவமும், தைரியகுணமும், அபிமானமு முள்ளவர். எப்பொழுதும் உயர்ந்த இலக்ஷயமே அடைவதில் கருத்துடையவர். சிறிய குற்றங்களை பாவிப்பவரேயல்ல.

கோட்கைகளின் பேதங்கள்.—நம்மவருக்குள் ஐக்கியம் ஒரு விஷயத்திலிருக்கிறது. மிதவர்திகளாகட்டும் இருவரும் சுயராஜயத்துக்கு இஷ்டப்படுகிறார்கள். சுயராஜ்யத்தை அடைவதில் நம்மவர்கொண்டிருக்கும்

கொள்கைகளில் பேதங்களிருக்கின்றன, இவைகளை நாம் இங்கு குறிப்பது அவசியமேயாகும். ஆயினும் இவைகளை நாம் அரவிந்தகோஷையும் திலகரையும் விட செவ்வையாய் எடுத்துரைக்க முடியாதாதலால் அவர்கள் சொல்வதை மொழிபெயர்த்துக் கூறுவதே சிலாக்கியமென்று நினைத்து அப்படியே செய்கிறோம்.

திலகர் சொல்கிறார்—'நன்றாய் நீந்தப் படித்துக் கொண்டுதான் நீருக்குள் இறங்கவேண்டும். இல்லையேல் பிராண அபாயமுண்டு என்கிறார்கள் மிதவாதிகள் ஆனாலோ அமிதவாதிகளென்போர், 'தண்ணீருக்குள் இறங்காமல் நீந்தக் கற்றுக்கொள்ளல் எப்படி? ஆகையால் துணிந்து இறங்கியே தீரவேண்டும் நீந்தக் கற்கவேண்டுமானல்? என்கிறார்கள். எனக்கு இதைத் தவிர இருகட்சியாருக்கும் வித்தியாசங்களிருப்பதாகத் தோன்றவில்லை என்கிறார் திலகர்.

அரவிந்தகோஷ் பின் வருமாறு வித்தியாசங் குறிக்கிறார்.

மிதக் கட்சியார் ஜனங்களை நம்பார்கள். அமிதக் கட்சியார் ஜனங்களையே நம்புகிறார்கள்.

மிதக்கட்சியார் துரைத்தனத்தாராலேயே நமக்கும் தேசத்துக்கும் நன்மைகள் உண்டாகவேண்டுமென்கிருர்கள். அமிதக் கட்சியார் அதில் பிரயோஜனமில்லை. நமதுஐக்கியத்தாலும், ஒற்றுமையாலும் நமக்கு முக்தி கிடைக்குமென்கிருர்கள்.

மிதக் கட்சியார் ஜனங்கள் எல்லாம் கற்றவர்களல்ல. சுப அறிவுள்ளவர்களல்ல. அறிவு போதாது தயாராகவேண்டியவர்கள். காலம் பிடிக்கும் அதற்கு என்கிருர்கள். அந்தக் கட்சியாரோ இப்படி சொல்லிக்கொண்டே யிருந்தால் எப்படி தயாராவது எப்பொழுது தயாராவது. தயாராயிற்று. தேச க்ஷேமத்துக்கு வேண்டி வேலைகள் விரைவாய துடங்குவோம் என்கிருர்கள்.

திலகரும் 23-வது காங்கிரசும்.—இருகட்சியார்களின் கொள்கைகளின் பேதங்களைக் குறித்தோம். சென்ற இரண்டு வருஷகாலமாக துரைத்தனத்தார் நம் அபிப்பிராயங்களை கவனியாது, அவர்கள் யுக்தப்படியே ஒவ்வொரு விஷயத்தையும் செய்வதும், செய்வது பிசுமயாயிருந்தபோதிலும், பொது ஜனேப்ஷ்டத்துக்கு விரோதமா யிருந்தபோதிலும், அதையே சாதிப்ப

தால் இராஜரீக விஷயங்களில் அநுபோகமுள்ளவர்க் களில் சிலர் துரைத்தனத்தில் நம்பிக்கை யிழந்தார்கள். இவர்களுக்குள் பிரமுகர் திலகர். துரைத்தனத்தாரை நம்மிஷ்டப்பிரகாரம் செய்யச்செய்வது மனுவாலும், கெஞ்சுவதாலுமல்ல, அவர்களை நாம் ஒதுங்கி நிற்பதா லும், பஹிஷ்காரத்தைப் பரவச்செய்வாதனும் என் றும், அதற்கு சாதனம் ஜனங்களிடம் விஷயங்களை உ ரைத்து அவர்களை நம்முடன் ஒத்துழைக்கச்செய்வதே என்றும், திலகரும் அவரின் சகாக்களும் பிரசங்கங்க ளாலும், பத்திரிகைகளில் எழுதுவதாலும், ஜனங்களி டம் உண்டாயிருக்கும் நவசக்தி பரவியிருப்பதால் இவ் ர்களைச் சேர்ந்தவர்கள் நாடு நன்மையடைய மார்க்கம் பஹிஷ்காரம், சுவராஜ்யம், சுதேசிபக்கல்வி, சுதேசியம் முதலிய பிரேரேபணைகளை காங்கிரஸில் கொண்டுவந்து தீர்மானங்களாக்குவது: அதற்கு சாதகம் திலகர் அக் கிராசனம் என்று 1907 வருஷாரம்ப முதல் முயற் சித்து வந்தார்கள். நாகப்பூரிலிருக்கும் திலகர் கட் சியார் காங்கிரஸ் பிரவேசகூட்டத்தில் திலகருக்கு தலை வஸ்தானம் கிடைக்கும்படி முயற்சித்தார்கள். இதை சில பிரமுகர்கள் விரும்பாதகால் நாகப்பூரில்கலகம் ஏற் பட்டது. அவர்கள் திலகர் தலைவஸ்தானத்துக்குச்கூறி ய ஆக்ஷேபனை நியாயமில்லாததும், விவேகமில்லாதது

மாயிருந்தது. அதிமிதவாதிகள் ஒன்றுசேர்ந்து மித வாதிகள் நிறைந்த இடமாகிய சூரத்துக்கு காங்கிரஸ் கூட்டத்தை மாற்றினார்கள். அங்கு ஒரு சபையில் ராஷ்விகாரிகோஷை தலைவராகத் தேர்ந்தெடுத்தார்கள். இந்த சபைக்குச் சென்றிருந்த திலகரும் கபார்தேயும் இந்த பிரேரேபணைக்கு அபிப்பிராயம்கொடுக்கவில்லை. திலகர் சில காலத்துக்குப் பின்னர் லஜபதிராய் சிறை மீட்கப்பட்டதும், கேசரியில் அவருக்கு மரியாதை செய்யத் தருணம் இதுதானென்றும், ஆகையால் அவருக்காக கோஷ் தம் ஸ்தானத்தைக் காலி செய்வது அவரின் பெருந் தன்மைக்கும், தயாள குணத்துக்கும் சரியானதென்றும் எழுதினார். அனேக இடங்களில் இதற்காக சபைகள்கூடி அந்தத் தீர்மானத்தைச் செய்தன. லஜபதிராய் கடைசியில் தமக்கு கோஷுக்கு போட்டியாய் நிற்க பிரியமில்லை என்று ஒரு கடிதம் எழுதினார். அத்துடன் இந்த ஓய்ச்சல் ஒழிந்தது. டாக்டர் கோஷ் அவர்கள் சட்ட சபையில் இராஜத் துரோகச் சட்டம் வாதிக்கப்படுங் காலத்தில் திலகரை சேர்ந்த அமிதவாதிகளைப்பற்றி இழிவாய்ப்பேசியதால், இவர்களுக்கு அவர் அக்கிராசனாதிபதியாயிருத்தல் விருப்பமில்லை. இருந்தாலும்நியாயவழி ஒன்றுமில்லாதிருந்ததால் இவர்கள் சும்மாயிருந்தார்கள். காங்கிரஸ் காரிய

தரிசிகளுள் ஒருவராகிய கோகலே பேசப்படவேண்டிய விஷயங்களுள் அமிதவாதக் கட்சியார் அத்தியாவசியமென்று நினைக்கும் தீர்மானங்களை விட்டுவிடவோ, அல்லது மாற்றவோ போகிறாரென்ற சமாசாரம் அவர்களுக் கேட்டவே அவர்கள் என்ன செய்வதென்று கலந்து பேசிக்கொண்டார்கள். திலகர் சுதேசியர்களின் கோட்பாடுகள் என்று ஒரு பிரசங்கம் செய்ததில் தம் கட்சியார் என்ன செய்யவேண்டுமென்றும் தம்மபிப்பிராயமென்னவென்றும் தெரிவித்தார். காங்கிரஸ் கூடிய மறு தினத்தில் திலகர் பேசப்படவேண்டிய விஷயக் குறிப்புகள் தமக்குக் கிடைத்ததும் தாம் ஒருபிரேரேபணைகொண்டுவரப்போகிறதாகவரவேற்புக்கமிட்டித் தலைவருக்கு ஒரு குறிப்பு எழுதினர். அதற்குப்பதில் இவருக்குக் கிடைக்கவில்லை. மறுபடியும் ஞாபகமூட்ட சீட்டு ஒன்று எழுதினர். அதற்கும் பதிலில்லை. சுரேந்திரநாத் பேசிமுடித்தபின் மேஜையண்டை திலகர் சென்றார். அவரை ஒரு வாலண்டியர் தடுத்தான். அவர் எப்படியோ மேஜையண்டை நின்றுகொண்டு பேச உத்திரவாகவேண்டுமென்றார்.

கோஷ்—'நீர் பிரேரேபணைக் கொண்டுவந்திருப்பது ஒழுங்குக்கு விரோதம்'.

திலகர்.—'ஐயா, தாங்கள் இன்னும் ஒழுங்குப் படி நியமனமாகவில்லையே!'

கோஷ்.—'நான்தான் அக்கிராசனாதிபதி. நீர் இனி பேசக்கூடாது. உமது இடத்தில்போய் உட்கார வேண்டும்.'

திலகர்.—'நான் இங்கிருக்கும் பிரதிநிதிகளிடம் கேட்கிறேன். அவர்கள் நியாயம் சொல்லட்டும். அதற்கிடையே இந்த சரீரம் அப்படியே தூக்கப்பட்டாலொழிய இந்த இடத்தைவிட்டு நகராது.'

இவ்வாதங்களிடையே கீழிருக்கும் பிரதிநிதிகளுக்குள் சண்டையுண்டாகி ஏகக் குழப்பமேற்பட்டது. எல்லாரும் மேடைக்கு ஓடினார்கள். திலகரைப் பஞ்சாப் பிரதிநிதி கையால் அடிபடாமல் காப்பாற்றினார். கடைசிவரை எல்லாமிதவாதிகள் தலைவர்கள் மேடையை விட்டு பின் கதவு வழியாய்ப் போகும்வரை திலகர் அங்கேயே நின்றார். காங்கிரஸ் இப்படி கலைய நேரிட்டதைப்பற்றி அவருக்கு மிக்க விசனம். மறுநாள் சுதேசியர்கள் கூட்டத்தில் காங்கிரஸ் நிலையைப்பற்றி ஒருபந்நியாசம் செய்தார்.

கோகலேயும் திலகரும்.—மஹாராஷ்டர இராஜ்பத்தின் புராதன இராஜதானியாகிய பூனா தான் அமிதவாதிகள் இருப்பிடமென்று பலர் எண்ணியிருந்தாலும் இராஜரீக எண்ணங்களிலும் வழிகளிலும் மாறுபாடு கொண்டுள்ள இருஜனத்தலைவர்கள் இருக்கும் நகரம். கோகலேயும்,திலகரும் பூனாப் பிராமணர்கள். கோகலே இங்கிலாந்திலிருந்தகாலத்தில் ஆங்கிலேயரே அவரை அவரின் பெருந்தன்மைக்காகவும், அடக்கத்துக்காகவும், விஷயங்க ளொவ்வொன்றிலும் அவருக்குள்ள விசேஷ ஞானத்துக்காகவும், ஒரு விஷயத்தை பிரஸ்தாபிப்பதில் அவரின் நயமான மாதிரிக்காகவும் புகழ்ந்திருக்கிறார்கள். இந்தியர்களோ அவரிடத்தில் விசேஷ மதிப்புக்கொண்டிருக்கிறார்கள். அவர் கல்வி விஷயத்திலும். பொது ஜன வாழ்விலும் உழைத்த உழைப்புகளால் இராஜாங்க ஏற்பாடுகளில் சிறந்த ஞானம் அவருக்கு ஏற்பட்டுள்ளது. இராஜப்பிரதிநிதி சபையின் வரவு செலவுக்கணக்கு மெம்பர்களில் அவரை மெச்சிப் பேசாதவர்களில்லே. நமக்கு அவரின் சிரமங்களால் சில நன்மைகள் உண்டாயிருக்கின்றன. துரைத்தனத்தாரை அனுசரித்து அவர்கள் மூலியமாய் சீர்திருத்தம் செய்யப்படவேண்டுமென்பது அவரின் கொள்கை. இதற்காக சிலர் அவரிடம் குற்றம் காண்கிறார்கள்.

திலகரோ இவருக்கு நேர்விரோதமானவர். இராஜத்துரோகச் சட்டத்தின் தண்டனை எல்லையைக் கரை கண்டவர். அவருக்கு துரைத்தனத்தார் ஒருவரை நசுக்கவேண்டியிருந்தால் அவர்கள் வசம் எவ்வளவு ஆயுதங்களும் சட்டங்களுமிருக்கின்றனவென்று நன்ருய்த் தெரியும். இருந்தாலும் எவ்வளவோ கஷ்டங்களுக்குள்ளாளுலும் உயிருடனிருக்கிருர். மேற்குபாகத்தில் அவர்பெயர் பெரும்சக்தி. பயோனியர் பத்திரிகையானது அவர் புஸ்தகத்தை ஆராய்ந்து குறிப்பு எழுதினதில் 'பண்டிதர், சட்டவாதி, பத்திராசியர், கலகக்காரர். இத்தகைய சாமர்த்தியசாலியின் திறமைகள் துரைத்தனத்தார் அவநம்பிக்கைப்படும் விஷயங்களில் பிரயோகமாகின்றனவே' என்று புலம்புகிறது.

கோகலே அபிப்பிராயத்தைத்தாங்கி நிற்பவர்களை மிதவாதிகள், நிதானிகள், என்று தற்காலம் ஜனங்கள் வழங்கிவருகிருர்கள். திலகரின் அபிப்பிராயங் கொண்டவர்களை அமிதவாதிகள், சுதேசிகள் என்று ஜனங்கள் வழங்கிவருகிருர்கள். இருவர்களுக்கும் நோக்கம்

ஒன்றேயாயினும் அதையடைய அவரவர்கள் சொல்லும் மார்க்கங்கள் வெவ்வேறாயிருக்கின்றன.

ஜனத்தலைவ ஸ்தானத்துக்கு திலகர் தகுதியுடையரோ? தாய் தேசத்தின் நலத்தின் பொருட்டும், சகோதரர்களின் நன்மையின் பொருட்டாகவும், தம் சொந்த நலங்களையும் இன்பங்களையும் ஒதுக்கிவைத்து, 'கருமமேகண்ணாயினர்' என்ற சான்றோர் மொழிக்கொப்ப தமக்குண்டாகும் கஷ்டநிஷ்டூரங்களை கவனியாது, கருத்துச் சித்தியெறும் வரையில் கருமத்தினின்றும் தம் நோக்கத்தை நீக்காதவரே ஜனத்தலைவர்களாவார்கள். தேசபக்தியில் ஈடுபட்டு உய்யும் மார்கத்தைக் கைகொண்டவனுக்கு, சகோதரர்கள் அன்புக்கும் விசுவாசத்துக்கும் பாத்திரனாய் உயிர்வாழ்வதிலும், வாழ்க்கையிலடையும் பெரும் பயன் எது? திலகரின் அளவில்லாத கல்வியும் விடாமுயற்சியும், சலிப்பின்மையும், மனத்தளர்ச்சியின்மையும், அவரை சுதேசிகளுக்குபரமகுருவாகவும், தலைவராகவும் செய்துவிட்டது. ஜனங்களின் க்ஷேமத்துக்காக இவர் உழைத்ததில் இவருக் குண்டான கஷ்டங்கள் பல. நம் தேசத்தில் பத்திரிகா சுதந்தரத்துக்காக நடந்த போரில் ரணகாயம் பட்டு மிக்க நொந்தார். யாருக்காக இவ்வளவு கஷ்

டம் அவருக் குண்டாயிற்று? பிரமாதமான கஷ்டநிஷ் டூரங்களையும் மிக்க பொறுமையுடனும், சாமர்த்தியத் துடனும், மனதிடத்துடனும் அவர் எதிர்க்கவும், அவைகள் சூரிய கிரணங்கள்பட்ட பனிபோல் நீங்கின அக்கஷ்டங்களுக்கு மனம்குழையாமல் அவர் பொறுமையு டன் அடங்கினதை மெச்சாதவர்களெவரே? திலகர் தாம் இயற்றிய போரால் இராஜத்துரோகக் குற்றம் சாட்டப்பட்டு சிறையிலடைபட்டு, திருடன், கொலை பாதகன் முதலியவர்களுடன் ஒருவராய் கைகால்களில் விலங்குபூண்டு துன்புற்றது நமக்காகவும், நம் பாரதத் தாய்க்காகவுமல்லவா? இதனால் நம் நாட்டாரின் இரா ஜாங்கத்துறைக்கு ஒரு நூதன மார்க்க முண்டாகியது மன் னியில், அவர் வாழ்க்கையிலும் ஒரு விசேஷ மாறுதல் உண்டாயிற்று. இப்பொழுது ஒரு கேள்வி நம் பதிலை எதிர்பார்த்து நிற்கிறது. நமக்கும் நம்மை யாள்வோருக் கும் இனி பந்துத்வம் எப்படி முடியுமென்பதே அக்கே ள்வி. எக்காலத்திலாவது நாம் ஆள்வோருடன் சமத் துவம் பாராட்ட முடியுமோ? அல்லது சந்திரசூரியர்கள் இருக்கும் காலவரையில் நாம் தண்ணீர் இழுப்பவர்களா கவும் விறகுவெட்டுபர்களாகவும் இருந்துதான் தீரவேண்

டுமோ? இதை நாம் சாவதானமாயும் அமைதியாயும் யோசித்துத் தீர்மானிக்க வேண்டியிருக்கிறது. இதற்கு சரியான தீர்மானம் செய்பவர்எவரேனும் அவரன்றியார் நம் தலைவர்?

அமிதவாதக் கட்சித்தலைவர். திலகரை அமிதவாதிகள் தலைவராகக் கொண்டுழைத்து வருகிறார்கள். இவர் சென்ற வருஷம் ஆரம்பத்தில் அமிதவாதிகளின் கொள்கைகள்* (Tenets of the Extremists) என்றபிரசங்கத்தில் தெளிவாய் விஷயங்களை எடுத்துரைத்திருக்கிறார். இவருடன் சேர்ந்தவர்கள் கல்கத்தாபெபின் சந்தரபாலர் மத்தியமாகாணத்தைச்சேர்ந்த கபார்தே, பாரிசால் அஸ்வின்குமாரதத்தர்,சென்னைஎன். கே. இராமசுவாமிஐயர், பெபின்பாலர் சென்னையில் வந்துபிரசங்கம் செய்தகாலத்தில் சில மேதாவிகள் அவரையும் அவரைச் சேர்ந்தவர்களையும் இழிவுபடக் கூறினதில் "அமிதவாதிகள் யாரென்றால், பேராசைக்காரர்கள், வாழ்க்கையில் அபஜயமடைந்தவர்கள்,பள்ளிப்பேதைப்பிள்ளைகள்முதலியவர்

* இப்பிரசங்கம் மிஸ்டர் சி. சுப்பிரமணிய பாரதியால் மொழி பெயர்க்கப்பட்டு விலைக்கு விற்கப்படுகிறது.

களே". என்றார்கள். திலகர்போன்றவர்கள் வாழ்க்கையில் அபஜயமடைந்தவர்களா? பேராசைக்காரர்களா? திலகர் இருபது வருஷத்துக்குமுன் ஒரு சமயத்தில்தம்கருத்துக் களை எப்படி வெளியிட்டிருக்கிறார் கேளுங்கள். வேறெந்த இந்தியருக்கு அம்மாதிரி சொல்ல தைரியமிருந்தது? (Public Service Commission) சங்கத்தார் இவரை சாக்ஷியாக விசாரித்தபொழுது அவர் அபிப்பிராயங்கள் எப்படி இருக்கின்றன பாருங்கள். அவரை இழிவுபடுத் திக்கூறுபவர் இருந்த இடம்கூட அக்காலத்தில் தெரியாது. கீழ் நாம் குறிப்பவைகளால் இந்தியர்களைவிட ஆங்கிலே யர்கள் மேன்மையாயிருப்பது அவர்கள் இந்தியாவைகைப் பற்றின காரணமன்றி, இராஜாங்க நிருவாக மேன்மை யாலல்லவென்பது வெளியாகிறது. இந்துதேச சரித்திரம் படித்தவர்களுக்கு நம் தேசம் எப்படி அவர்கள் கைக் குள்ளானது என்பதை நாம்சொல்லவேண்டுவதனாவ சியம்.

## திலகர் வாக்குமூலம்.

மிஸ்டர்ஸ்டேவர்ட்.—StatutoryCivil Sevice.—ஐப்பற்றி ஜனஅபிப்பிராயம் இன்னதென்பதை தயவுசெய்து சொல்வீரா

திலகர். இதுவும், (ஜனங்களின்) சுதந்திரத்தை பார்லிமெண்ட் சபையாரால் கொடுக்கபபட்டுள்ள குறைக்க ஏற்படும் யோசனைகளும் முழுவதும் வெறுக்கப்படுகின்றன. இந்நாட்டிலுத்தியோகஸ்தர்களை நியமிக்குமுன், நாட்டிலுள்ளாருக்கு முதலில் கொடுத்துவிட்டுப் பிறகு தான் அயலாருக்குக் கொடுக்கப்பட வேண்டுமென்று நான் நினைக்கிறேன்.

ஸ்.—அயலாரில் ஆங்கிலேயர்களுமொருவரோ ?

தி.—அவர்களை நான் இந்நாட்டாராகக் கொள்வதில்லை. துரைத்தனத்தாரின் முதல்கடமை, நாட்டிலுள்ளாருக்கு உத்தியோகம்கொடுப்பது. அயலாருக்கு உத்தியோகம் கொடுத்தால் தக்கன்முகாந்தரங்களிருக்கவேண்டும். அப்படிசெய்வதற்குஒரு அயலாருக்கு உத்தியோகம் கொடுக்கப்பட்டால்அதற்குக்காரணங்கள் போதியதாயும் சரியானதாயு மிருக்கவேண்டும்.

அமிதவாதிகள் பேராசைக்காரர்கள் என்று சொல்லப் பட்டதல்லவா? மே் திலகர் கொடுத்திருக்கும் மறுமொழிகள் அப்படி சொல்வோரின் வாயை அடக்கிவிடப் போதுமானது.

ஸ்.—ஆயின் ஒவ்வொரு ஆங்கிலேயன் உத்தியோகத்திலேற்படும்பொழுதெல்லாம் அதற்கு காரணம் காட்டவேண்டுமல்லவா.

தி.—இல்லை,பொதுவாகஆங்கிலேயன் மட்டுமல்ல எந்தவகுப்பாரை நியமிப்பதிலேயும் காரணம்குறிக்கவேண்டும்.இதைஆதாரமாகக்கொண்டுதான் நான் பேசுகிறேன்.

மிஸ்டர் நல்கார். ஒவ்வொருஐரோப்பியன் உத்தியோகத்தில் நியமிக்கப்படுவதிலும் காரணம்காட்டப்படவேண்டுமென்பது எனக்கு நன்றாய் விளங்கவில்லை.

தி.—நான் சொன்னதின் அர்த்தம் இதுதான். நாட்டிலுள்ள உத்தியோகத்துக்கு சுதந்தரமுடையவர் அந்நாட்டார்களே. இந்த வழிதப்பினால் வழிதப்புவோர் அப்படி செய்வதற்கு முகாந்தரம் சொல்லவேண்டுவதுஅவரின் பாரமாகிறது. தக்க முகாந்தரமில்லாமல் அயலானுக்குக் கொடுக்கமுடியாததலால், வெகு சிலவே அவர்களுக்குக் கொடுக்கப்படும். (Covenant Service) முதலில் இங்கு ஆரம்பமானபொழுது ஜனங்கள் மேற்கத்திய கல்விப் பயிற்சி யில்லாதவர்களா யிருந்தார்கள். அவர்கள் இப்பொழுது அபிவிர்த்தி யடைந்திருக்கிறார்கள். அவர்களின் அபீஷ்டை நிறைவேற வேண்டும்.

ஸ்.—சுதேசிகளுக்குமுதல்சுதந்திரமென்றும்;ஒவ்வொருஅந்நியனுடைய உத்தியோகமும் சரியென்று ருசுப்படுத்த வேண்டுமோ ?

தி.—அயலார் எவராயிருந்தாலும் அதேநியாயம்தான்.

ஸ்.—இந்நாடு ஆங்கிலேயர் வசம் வந்தகாலம் நியாயம் கூறப்பட்டது, அது நியாயம்தானே?

தி.—ஆம். அப்படித்தான்.

ஸ்.—நியாம் கூறும்படி விடப்படவில்லே?

தி.—இல்லே.

ஸ்.—சுதேசிகள் ஐரோப்பியர்களுக்கு சமானமானவர்கள் என்று ருசுப்படுத்தவேண்டாமா?

தி.—அதைத்தான் நான் என்னுல் கூடியவரை சொன்னேனே.

மிஸ்டர் க்ராஸ்வைட்.—நீர்பட்டங்கள்பெற்றபொழுது உமக்கு வயது என்ன?

தி.—பி.ஏ.ப்பட்டம்19-ஆம்வயதிலும்எல்எல்.பி. ப்பட்டம் 21-ஆம் வயதிலும் பெற்றேன்.

க்.—ஆயின் நீர்சிவில்சர்விஸ் போட்டிப்பரிக்ஷைக்கு ஏன் போகவில்லே?

தி.—போட்டியாகப் போக எனக்கு கருத்து இல்லவேயில்லே.

கி.—இந்த இராஜதானியில் காங்கிரஸைச்சேர்ந்தவர் நீர். உமக்கு எந்தபாகத்தில் வேலை கொடுக்கப்படவேண்டும்?

தி.—எனக்கு துரைத்தனத்தார் கீழ் ஒருத்தியோகமும் கொடுக்கப்பட வேண்டுமென்று பிரியமில்லை. நான் வாதிப்பதெல்லாம் சமயம் வாய்த்த பொழுதெல்லாம் சுதேசிகள் நியமிக்கப்படவேண்டுமென்றும் இராஜாங்க நிருவாகத்தில் சுதேசிகளுக்கு சகல சுதந்திரமும் வேண்டுமென்பதே,

இதைத் திலகர் அவர் காங்கிரஸில் சேர்வதற்கு முன்னமேயே சொல்லியிருக்கிறார். அவர் வாழ்க்கையில்அபஜயமடைந்தவர். ஏன் ? சர்க்காரில் தனக்காக ஒரு வேலையும் வேண்டாமென்றாரல்லவா?

## சுதேசிகளின் சித்தாந்தங்கள்.

இப்பிரசங்கம் காங்கிரஸ் கூட்டத்திற்குவந்த 3000 பிரதிநிதிகள் முன் டிசம்பர் மீ 23-ம்தேதியில் திலகரால் செய்யப்பட்டது:—

“நாங்கள் இந்திய ஜன மகாநாட்டை பிளவு செய்ய வந்தவர்களல்ல. தனியான மகாநாட்டைக் கூட்டுவது. எங்களிஷ்டமல்ல. நாங்கள் விரும்புவதெல்லாமொன்றே

மகாநாடானதுபின் நோக்கிச் செல்லக்கூடாதென்பதே. நான் சத்தியமாய் சொல்கிறேன். காலத்துக்குத் தகுந்த மாதிரி மகாநாடு நடக்கிறதைக் காணவேண்டுவது எங்கள் நோக்கம். நாங்கள் அதுபின்னுக்குப் போகப் பார்க்க சகிக்கமாட்டோம். எங்கள்நோக்கம் பிசகாய் வியாக்கியானம் செய்யப்படுகின்றது. இந்தப்புதிய கட்சி முயற்சிகள் அபிவிர்த்தியைத் தடுக்கிறதென்று சொல்லிக்கொள்ளப் படுகிறது, பிசகு. எங்கள் யோசனை அழிவுண்டாக்குவதன்று. மகாநாடு விருத்தியடைவதில் முயற்சிப்பதே எங்களெண்ணம். காலம்மாறிக்கொண்டு வருகிறது, ஆகையினால் அதற்குத் தகுந்த சில மாறுதல்களுக்காக நாங்கள் பிரியப் படுகிறோம்.

எங்கள் நோக்கம் சுயராஜ்யம். * இது எவ்வளவு சீக்கிரத்தில் சித்திபெறலாமோ, அவ்வளவு சீக்கிரத்தில் எங்களுக்குக் கிடைக்கவேண்டும். இதை நீங்கள் நன்றாயறியவேண்டும். ராசபுரியானது என்ன சிலவானாலும் தாங்கயியைந்த பொழுதும் சூரத்துக்கு மகாநாட்டை இழுத்தவர்கள், மகாநாட்டையும் பின்னுக்கிழுக்கப்பாக்

---

இதை திலகர் விஸ்தரிக்கிறார் பக்கம்.

கிறார்கள். இந்த செல்வக் கட்சியாரின் முயற்சி எங்களுக்குப் பிடிக்கவில்லை. இக்கட்சியார் புதிதாகக் கிளம்பியிருக்கும் முளையை இளமையிலேயே கிள்ளிவிடப்பார்க்கிறார்கள். ஆகையினாலேதான் பஹிஷ்காரம் சுயராஜ்யம் இவ்விரண்டைப்பற்றிய தீர்மானங்களை நீக்கப்பார்க்கிறார்கள். அவர்களுக்கு பகிரங்கமாய் பஹிஷ்காரத்தைச் சொல்வதிலும், போதிப்பதிலும் பிரியமில்லை. அவர்களுக்கு மனதிடம் கிடையாது. அவர்களுக்கு பஹிஷ்காரம் என்றவார்த்தையே பிடிக்கவில்லை. அவர்கள்சுதேசத்தைவிரும்புகிறார்கள். நீங்கள் அதை விரும்புகிறவர்களானால் பயப்படாதேயுங்கள். பயங்காளியாயிராதேயுங்கள் நீங்கள் சுதேசியத்தைக் கைக்கொண்டால், விதேசியசாமான்களை விலக்கவேண்டுவது அவசியமாகிறது. அந்நிய சரக்கு விலக்கில்லாமல்சுதேசியத்தைக் கைக்கொள்வது எப்படி? சுதேசியத்தை ஒத்துக்கொண்டால் பஹிஷ்காரத்தையும் ஒத்துக்கொள்ளுங்கள். நாங்கள் வேண்டுவது இதுவே. உங்களுக்கு செய்ய பிரியமில்லாததைச் சொல்லவே வேண்டாம். ஆனால் சொல்வதைமட்டும் செய்யுங்கள், வாக்கு பரிபாலனம் மட்டும் செய்யுங்கள். இதைத்தான் நாங்கள் உங்களிடம் எதிர்பார்க்கிறோம்.

எங்கள் சண்டையெல்லாம் மனிதர்களுக்காகவல்ல. அக்கிராசனதிபதி தேர்ந்தெடுப்பதற்காகவல்ல. நாங்கள் வேண்டுவது பின்னை எதுவெனில், உறுதியானகொள்கைகளுடையமனிதரே வாழும் இரண்டு கொள்கைகளுக்கும். (1) பயமின்றி சரியென்று தோன்றுவதைச்செய்கல். (2) செய் ஆனல்துரைத்தாரின் வெறுப்புண்டாகாமல் பார்த்துக்கொள். நான் எந்தக்கட்சியைச் சேர்ந்தவன், என்றால் எந்தக்கட்சியார் தாங்கள் சரியானது என்று நினைக்கிறார்களோ, அதை துரைத்தனத்தார் விரும்பினாலும் சரி, வெறுத்தாலும்சரி, செய்கிறார்களோ, அந்தக்கட்சியைசேர்ந்தவன். (எங்களிடம் விருப்பம் வெறுப்பு என்பது கேள்வியேயல்ல.) எங்கள் கடமைகளை எங்களுக்காகவும், நாட்டுக்காகவும், செய்யவிருப்பமுடையோம். கடமை நெறியில் நடப்பதால் நாங்கள் நியாயமான அதிகாரத்துக்கு அஞ்சவேண்டுவதில்லை. அதிகாரம் எவ்வளவு உன்னதமானதாயிருக்கட்டும். எங்களுக்கு பிச்சை யெடுக்கும் வழி பிடிக்கவில்லை. ஏனெனில் இந்த வழியால் நாம் விரும்பும் பயன் கிட்டாது. ஆனல் அவ்வழி நம்மைக் கெடுத்துவிடுமென்பது அநுபவத்தில் தெரியவந்துளது. இந்தவழியைக் கைக்கொண்ட பங்காள யௌவனர்கள் அனேகர்

குட்டிப்பட்டிருக்கிறார்கள்.மார்லியும் சர்க்கார் உத்தியோகஸ்தர்களும் நமக்குள் சச்சரவுண்டாக்கி நம்மைப் பிரித்துவிடப் பார்க்கிறார்கள். அவர்கள் நம்மை மிதவாதிகளுடன் சேரும்படி சொல்கிறார்கள். இதைச்செய்ய நாம் தயாராயிருக்கிறோமா? நாம் முன்வைத்தஅடியைப் பின்வாங்குவது மௌட்டிகமாகும்,முன்யோசனை யின்மையாகும். கல்கத்தாவில் சென்றவருடம் அரும் பெரும் கிழவனார் தாதாபாய் நாரோஜி சுயராஜ்யக் கொடியைப் பிரித்துவிட்டார். இதுதான் நம் இலக்ஷ்யம். நாம் இந்தத்திட்டானத்திலிருந்துவிலகுவோமானால் அவர் நம்மைப்பற்றி என்ன சொல்வார்? நாம்தேசத் துரோகிகளாவோம். நம் அடைய விரும்புவது இராஜரீக மறுவாழ்க்கை. இந்த இலக்ஷயத்தினின்றும் மகாநாட்டை பின்னிழுத்துச் செல்ல ஒருவனுக்கும் அதிகாரம் கிடையாது. இந்தப் பின்னிழுத்துச் செல்லும் முயற்சியில் உங்கள் நகரம் சம்பந்தப்படாமல் காப்பது உங்கள் கடமையாகும். நாம் அபிவிருத்தி முகம்தான் காட்டாமல் போனால்துலைந்துபோகிறது. நாம் பின்னோக்கிச் செல்லாமலிருக்கவாவது நம் சந்திக்கியன்றமட்டில் முயற்சிக்க வேணடாமா? மார்லியும் அவருடன் லண்டன் டைம்ஸ் பத்திரிகையும் இந்தி

யாவுக்கு சுயராஜ்யம் முயற்கொம்பு என்கிறது. மார்லிக்கும், ஆங்கிலோ இந்தியர்களுக்கும் அபாரமானது நமக்கு சாத்தியமானதாகலாம். ஏனெனில் நம் அக்கரைகளும் காலதேச வர்த்தமானங்களும் வெவ்வேறானவை, சுயராஜ்ய இலக்ஷயம்கிரக்ஷாகுக்ஷியும் தெரியக்கூடியதான உத்தேசம். நம் பல இலக்ஷயங்கள் எல்லாம் இப்பொழுது புனிதமானதும் தனிமையானதுமான சுயராஜ்யத்தில் ஒன்றுயிருக்கின்றன. "ஜனங்களுக்காக அரசாங்கம், ஜனங்களால் நடத்தப்படவேண்டும்." என்பதுதான் சுயராஜ்யம்.

நாங்கள் வந்திருப்பது மிதவாதிகளை திக்கு முக்கடையச் செய்வதற்கல்ல. மகாநாடு பின்னேக்கிச் செல்லவிடாமல் பாதுகாக்கத் துணிந்துள்ளோம். இதில் கடவுள் கடாக்ஷத்தால் ஜயமடைவோம். ஜயத்தில் எனக்கு நம்பிக்கை யிருக்கிறது. ஏனெனில் நாம் தொடங்கியிருப்பது கிரமமான நெறி. எவனுகட்டும், செல்வவானே வறியனே, அபிவிருத்தியைத் தடுக்க அவனால் முடியாதகாரியம். இதுவே எங்கள் இலக்ஷயம். சிறியவர்களுடையது மிதுவே, பெரியவர்கள் சிறியவர்களின் ஆவே

சத்தையும் ஊக்கத்தையும் அமுக்காதிருப்பது அவர்களின் கடமையாகும். அவர்களை எல்லை கடந்து செல்லாமல் பார்த்துக்கொள்ளுங்கள். அவைகளை அடக்க முயலாதேயுங்கள். மிதவாதிகள் பஹிஷ்கார வார்த்தையைக் கண்டு பயமுறுகிறார்கள். ஆனாலோ அச்செய்கையைப் பற்றி பயப்படுகிறதில்லை. இருகக்ஷியாரின் உணர்ச்சியும் ஒன்று. நாட்டிக்கு புதிய உயிர் சுதேசியமும் பஹிஷ்காரமும்கொடுத்திருக்கிறது. இராஜாங்கத்துக்கடங்கியுள்ள ஜாதியார் கைக்கொள்ள வேண்டுவது பஹிஷ்காரமென்னும் ஆயுதமே. இந்த ஆயுதங்கொண்டே அடிமைத்தனத்தை துவம்சம் செய்யவேண்டும்.

திரான்ஸ்வாலில் வசிக்கும் இந்தியர்களைப் பற்றிக் கேள்விப்பட்டிருக்கிறீர்கள். அவர்கள் இங்கிலாந்தரசன் குடிகள்போல்நடத்தப்படுகிறதில்லை. ஆனாலோநாம்இராஜாங்கத்தின் அவயவங்களாக இருக்கச் சொல்லப்படுகிறோம். இராஜாங்கத்தினடிமைகளாக இருக்கமாட்டோம். நாங்கள்எப்படியிருக்கவேண்டுமென்றால்,இந்தியாவிலும் இராஜ்யத்தின்எல்லா பாகங்களிலும் வெள்ளையர்களுக்கு சரிசமானமுள்ளவர்களாய் அல்லது சிநேகர்களாயிருக்க

விரும்புகிறேம். திரான்ஸ்வால் துரைத்தனத்தார் இந்தியர்கள்மேல் ஜாயா என்ற வரியை சுமத்தி யிருக்கிறார்கள். இந்தியர்களுள் 7,000 பேர்வழிகள் இந்த அநீதமானசட்டத்துக்குக்கீழ்ப்படிந்துநடப்பதில்லை என்றுதீர்மானஞ்செய்து கொண்டிருக்கிறார்கள். 400 பேர்வளிகள் தேசத்துரோகிகளாய் சட்டத்தை ஒத்துக்கொண்டிருக்கிறார்கள். இந்த 7,000 ஜனங்களின் மனோதிடத்தை நீங்கள் மெச்சுகிறீர்களல்லவா? மகாநாடானது இதைமெச்சுகிறது. மிதவாதிக்கட்சியாரும் மெச்சுகிறார்கள். தீர்மானங்களுள் இதுவும் ஒன்று. இந்த இந்தியர்களின் நடத்தைசரியென்றுநீங்கள் சொன்னால் நீங்கள் பஹிஷ்காரத்தையும் சரியென்று சொல்லவேண்டுவதில்லை. ஏனெனில் அவர்கள்என்னசெய்திருக்கிறார்கள்,அநியாயமான அந்நியரின்சட்டத்தை பஹிஷ்காரம் செய்திருக்கிறார்கள்.இது அக்கிரமமானதன்று. மிதவாதிகள் துரைத்தனத்தாருக்கு திருப்தியுண்டாக்கபிரியமில்லாதவர்கள். இந்த விஷயத்தில் எனக்கு திருப்தியே. ஆனாலோ அப்படியில்லை, அவர்கள் துரைத்தனத்தாருக்குப் பயப்படுகிறார்கள், அது புருஷத்தன்மையன்று. கஷ்டங்களை எதிர்க்கத்தயாராயில்லையே! நீங்கள் சும்மாயாவதிருங்கள்.எங்களைபின்னேக்கி

செல்லச் சொல்லாதேயுங்கள். உங்களை வேண்டிக்கொள்ளுகிறேன். சென்ற இரண்டு காங்கிரஸ்களால் எங்களுக்குக் கிடைத்திருக்கும் இலக்ஷ்யங்களைத் தடுக்காதேயுங்கள். ஒருதுரைத்தனத்தில் குடிகளின் பேச்சு அம்பலச் சொல்லாயின், பஹிஷ்காரம்தான் மிக்க உபயோகமானது. சூரத்மகாஜனங்கள் எங்கள் முயற்சிகளில் எங்களுக்குத் துணையிருந்து உதவி புரியும்படி கெஞ்சிக் கேட்டுக்கொள்ளுகிறேன்.

இப்பொழுது சுயராஜ்யம், பரிஷ்காரம் இரண்டையும்பற்றிச்சொல்லியாயிற்று. மூன்றாவது இலக்ஷயத்துக்கு இப்பொழுது வருகிறேன். சுதேசிபக்கல்வி. இதைப்பற்றி தீர்மானம சென்ற வருஷம் செய்யப்படவில்லையா? சூரத் வரவேற்புக்கமிட்டியார் அதை தீர்மானங்களுள் சேர்ப்பது உசிதமல்லவென்று நினைக்கிறார்கள் போலும். கடந்த ஏப்ரல் மீ த்தில் நடந்த கான்பரன்சில் இது பேசப்படவில்லை, விலக்கப்பட்டது. ஏனெனில் சில பேராண்மைக் காரர்களுக்கு இது பிடிக்கவில்லை. அவர்கள் சுயேச்சையாய் செய்துள்ளதுபோல் நான்செய்வதில் எனக்குப் பிரியமில்லை, நாம் விஷய ஆலோசனை சபையார்

முன்னும், பிரதிநிதிகள் மூன்னும் இந்தத்தீர்மானத்தை வைத்துப்பார்ப்போம். பிரதானமாய் மகாநாட்டுககு பக்திவிசுவாச முடையவர்கள் நாங்கள். இந்த பக்தி விசுவாசத்தைக்காட்டுவதில் எங்கள்சொந்த அக்கரைகள் இடையே வரின் அதை அப்புறப்படுத்தி வைப்போம். இது ஆசாமியைப்பொருந்தியதன்று. ஒருவன் எவவளவு உன்னத ஸ்திதி வந்தனுயினும் சரிதய, மகாநாடு மூலியமாய் மரியாதை அவனுக்கு ஏற்படக்கூடாது. இது எல்லாம் அபிவிருத்தியின் பொருட்டாகியபோரே. இதனல் மனஸ்தாபங்களும் இடையூறுகளும் இருந்தே தீரும். ஆயினும் நாம் ஒன்று கவனிக்கவேண்டும், இதுமேல் நோக்கிசெல்வதைத்தடுக்கும்படியாய் இடையூறுகள் ஏற்படாமல் பார்த்துக் கொள்ளவேண்டும். நம் காரியங்களுக்கு எல்லை யில்லாமல் போகவில்லை. நாம் வேண்டுவது சர்வசம்மதமே. அது இல்லையேல் தீர்மானம் பெரும்பான்மையரால் ஒத்துககொள்ளப்படட்டும். ஒத்துக்கொள்ளப்பட்டபின் தீர்மானங்களுள் ஒன்ருகட்டும். இதைமாற்ற அக்கிராசனுதிபதிக்கும் சுதந்திரம் கிடையாது. மகாநாட்டில் தீர்மானிக்கப்பட்ட விஷயமானது, அதைச் சேர்ந்த எல்லோராலும் ஒத்துக்கொள்ளப்படவேண்டும், நிவர்த்தியில்லை. அவர்களுக்கு அது பிடிததாலும் சரி,

பிடியாவிட்டாலும் சரி. அங்கே சோதாத்தனம் ஒன்றும் கூடாது. நாம் இங்குச் சண்டை செய்ய வந்திருப்பதாக சிலர் எண்ணிக்கொண்டிருக்கிறார்கள். நாங்கள் ஒழுங்காய் வாதாட வந்திருக்கிறோம். பக்தி விசுவாசத்துடன் வாதாடுவோம். எங்கள் எதிரிகள் பெருந்தன்மையாய் நடந்தாலும் சரியே, இல்லாவிடினும் சரியே, நாங்கள் மாத்திரம் அத்துமீறி நடக்கமாட்டோம். நம் எதிரிகள் தோல்விக்கு பயந்து சோதாத்தனத்தை உண்டாக்குகிறார்கள். நாம் போரிடுவது அந்நியராகிய உஸ்திமோகஸ்தர்களுடனல்லவா? அப்படியிருக்க செல்வகட்சியார் நம்மவரின் சுயேச்சா அதிகாரத்தை யேன் சும்மாவிடவேண்டும்?

ஆகையினுலே காங்கிரஸில் செல்வக்கட்சிக் காரரின் செல்வாக்கைத் தடுக்கவேண்டும். நாட்டாரெல்லாராலும் ஏற்பட்டது காங்கிரஸ். ஆகையாலே ஜனங்களின் அபிப்பிராயம் தலைதூக்கி நிற்கவேணும். எவனுகட்டும் பணக்காரனே, எளியனே, காங்கிரஸின் நோக்கத்தை அவனிஷ்டப்படி சொல்ல நீங்கள் விடக்கூடாது. நீங்கள் முன்னோக்கிச்செல்லாவிட்டாலும், பின்னோக்கிச் செல்லாதேயுங்கள். நம் இலக்ஷ்யம் கைகூடக்கூடியதே.

நம் இலக்ஷ்யத்தை நாம் விடக்கூடாது. மிதவாதிகளின் யுக்தி நாசமுகமாயிருக்கிறது. நீங்கள் அதன்படி நடக்கக்கூடாது. நாம் முன் நோக்கி அபிவிர்த்தி யடைய வேண்டும். மறுபடியும் நீங்கள்—மராட்டியர்களே! குஜராத்தியர்களே!—செல்வக்கட்சிக் காரர்களின் மிரட்டுகளுக்குப் பயப்படாதேயுங்கள். அஞ்சாதேயுங்கள். நமக்கு ஜயம் உறுதி. (வந்தேமாதரம்.)

திலகரின் சுயராஜ்யம்.—* நேவின்சனிடம் பின்வருமாறு திலகர் சொன்னார்:—"பிரிடிஷ் அரசாட்சியை சடுதியில் முழுவதிலும் நீக்கிவிடவேண்டுமென்கிற ஒரு சிறியகட்சியிருப்பதுண்மையே. இதைப்பற்றி எங்களுக்கு சம்மதமில்லை. சமீபத்தில் அது அசாத்தியம். ஒற்றுமையின்றி, நாம்இஷ்டப்பட்டாலும்பிரிடிஷ்ஆட்சியை அசைக்க நம்மால் கூடாது. இத்தகைய எண்ணங்களையெல்லாம் அனேக காலங்களுக்குப் பின் யோசித்துக்கொள்ளலாம். பிரிடிஷ் ஆட்சியைத் துலைப்பது அல்ல எங்கள் நோக்கம். ஆயின் இந்நாட்டின் ஆட்சியில் அதிகமாய்க்கலத்தலைவிரும்புகிறோம்.பிரிடிஷார் அதிகாரத்துக்குட்

* Special correspondent of the Daily chronicle who recently toured in India.

பட்டு இருக்கும் குடியேற்று நாட்டுகளுக்குக் கொடுக்கப் பட்டிருக்கும் சுயராஜ்யம் கிடைத்தால் எங்களுக்குப் போதுமானது. சீமையி லாட்சியானது 50, 60 அங்கத் தினர்களடங்கிய ஒரு சபைபால் நடத்தப்படவேண்டும். அங்கத்தினர்கள் முதலில் துரைத்தனத்தாரால் தேர்ந் தெடுக்கப்படலாம். நாளாவர்த்தியில் படிப்பு அதிகரிக்க வும் ஜனங்களால் தேர்ந்தெடுக்கப் படவேண்டும்."

இப்படி திலகர் தம் சம்பாஷணையில் சொன்னதாக நெவின்சன் நவம்பர் 7ௗ டேயிலிக்ரானிகள் என்ற பத் பத்திரிகையி லெழுதினர். மேலும் அவர் எழுதுகிறார். "நான் திலகர் மிதவாதத்தால் என்னை ஏமாத்துகிறாரெ ன்று நினைப்பதற்கில்லை. நான் யதேச்சையால் மாராட்ட ப்பத்திரிகை 20, 30 பிரதிகளைப் படித்துப்பார்த்தேன் இதைவிடவேறு இலக்ஷயம் அவைகளில் நான் காண வில்லை."

### சத்திய நோக்கம்.

"இந்த இலக்ஷயமும் சமீபத்திலில்லை. அனேக தலை முறைகளுக்குப்பின்னால் சாத்தியம். நாங்கள் இப்பொழுது உடனே செய்ய உத்தேசித்திருப்பது செல்வக்கட்சியா

ரை நெருக்குவதே. அவர்கள் சரியில்லை என்றுஉணரும் படி செய்வதே. சமீபத்தில் நம் பிரிடிஷ் அதிகாரிகளின் மாதிரிகளும் வழிகளும் கெட்டுப் போய்விட்டது. பெருந்தன்மைவாய்ந்த எல்பின்சன்டன்போல் அவர்கள் எங்களுக்கு சுதந்தரப்பயிற்சி கொடுப்பதைப் பற்றிய பேச்சை நிறுத்திவிட்டார்கள். லண்டன் டைம்ஸ் பத்திரிகை சொல்வதை இங்கிலீஷ் சரித்திரம் போன்றவைகளில் பயிற்சி நிறுத்தப்படவேண்டுமென்று ஒத்துப்பாடுகிறார்கள். ஏனெனில் சுதந்திரத்தைப் பற்றி ஏதாவது சுதேசிகளுக்குக் கற்பிப்பது அனர்த்தம். தற்காலத்தில் இராஜாங்க நிபுணர்கள் ரோமிய இராஜ்யத்தை இலக்ஷ்யமாக வைத்து வாதாடுகிறார்கள். அந்த இராஜ்யம் சீர்குலைந்தது அதன் மாகாணங்களிலுள்ள குடிகளுக்கு அவர்களுக்குரிய சுதந்தரம் கொடுத்ததால் என்று ஆக்ஸ்போர்ட் சரித்திரப்பிள்ளைகள் பிசகாய் கூறுவதொப்பக் கூறுகிறார்கள். ருஷிய துரைத்தனத்தைப்பற்றிமிக்க அவமதித்துக் கூறப்படுகிறது. ஆயினும் ருஷியாவும்கூட அதன் பெருமையும் விருத்தியும் ஓங்கிவளர முயல்கிறது. எங்கள் ஆங்கிலோ இந்திய துரைத்தனமோ எப்படி என்பது தெரிந்ததே. இது சொந்த நாடன்று. எவ்

வளமோ தூரத்திலுள்ளது. இதைப்பற்றிய சமாசாரங்களே வெவ்வேறு. எங்கள் துரைத்தனம் அந்நியர் கையிலிருக்கிறது. நான் பிரத்தியேகமாய் ஒருவரையும் குறிப்பாய் தூஷிப்பதில்லை. ஆயின் இந்த ஆட்சிமுறை சகிக்க முடியாததென்று."

## செல்வங்கட்சிக்காரரை நெருக்குதல்.

"வறுமையால் பீடிக்கப்பட்டிருக்கும் இந்நாட்டினின்று 30,000,000 பவுன்கள் வருஷாவருஷம் இங்கிலாண்டிற்கு வாரிக்கொண்டு போகப்படுகின்றன. ஆங்கிலேயர் தங்கள் நன்மைக்காக இந்தியாவிலிருந்த புராதனகைத்தொழில்களையும்வியாபாரத்தையும்அழித்துவிட்டார்கள் ஜனங்கள் எல்லாரும் பஞ்சத்தாலும், பெருவாரிநோயாலும் துன்பத்திலாழ்ந் திருக்கிறார்கள். நாங்கள் செய்ய வேண்டிய காரியம் அங்கிருக்கும் ஆங்கிலேயர்கள்இதை அறியும்படி செய்வதே. எங்களுக்கும் மிதவாதிகளுக்கும் பேதம் இதைச்செய்வதில் நாங்கள் கொள்ளும் அபிப்பிராய பேதங்களே. பிரதிநிதிகளை அனுப்புவதாலும், பத்திரிகை யொன்றை ஆதரிப்பதாலும், எங்கள் காரியத்தை நியாயங்கூறி வாதிப்பதாலும் பிரிடிஷாரின்

நல்ல அபிப்பிராயத்தை வெல்லவேண்டுமென்றிருக்கிறார்கள். நாங்களெல்லாம் இப்படி செய்வதால் நன்மையுண்டாகுமென்ற நம்பிக்கை யிழந்து சிலகாலமாயிற்று. இங்கிலாந்தில்கூட பெரும்பான்மையான ஜனங்கள் இந்தியாவைப்பற்றி ஒன்றும் தெரியாதவர்களாயும், தெரிந்துகொள்ள சிரத்தை யில்லாதவர்களாயு மிருக்கிறார்கள். இங்கிருந்து உபகாரச்சம்பளம்பெற்று சுகஜீவிகளாயிருக்கும் ஆங்கிலோ இந்தியர்கள் எக்காலத்திலும் எங்களுக்கு சத்துருக்களா யிருக்கிறார்கள். சில்காலத்துக்குமுன் லார்ட்க்ரோமர் இந்தியாவின் அபிப்பிராயம் அபிப்பிராயமல்ல அதை ஒருபொருட்டாக பாவிக்கவேண்டுவதில்லை யென்றார். அவரின் நம்பிக்கை லிபரல் கட்சியார் டிபார்ட்மெண்ட்தலைவர்களை ஆதிரிப்பார்க ளென்பதே. சென்றவருடத்திய (1906) சமாசாரங்கள் இதன் உண்மையை வெளிப்படையாய்க் காட்டுகின்றன."

## எங்கள் மார்க்கங்களும் ஒற்றுமையும்.

"எங்கள் எண்ணங்கள் இப்படிநிறைவேறுவதில்லையாதலால் அமிதவாதிகளாகிய நாங்கள் வேறுவழி தேடுகிறோம். அபிப்பிராய பேதம் சகஜம்தானே. வாலிபர்

கள் எங்கள் கக்ஷியைச் சேர்ந்திருக்கிறார்கள். எங்கள் கொள்கை 'தற்சார்பு' பிச்சைகேட்பதல்ல. சுதேசிய முயற்சியன்றியில் பஹிஷ்காரத்தையும் சுயேச்சையாய் நிர்பந்தத்துக்குட்படாது கையாளுகிறோம்.

"நாங்கள் அந்நிய சரக்குகளை வாங்குவதினின்றுகட்டாயமாய்ஜனங்களைத்தடுத்தலை நாங்கள்விரும்புவதில்லை. இராஜத்துரோக சட்டம்போன்றவைகளை நாங்கள் கவனிக்கவேமாட்டோம். எங்களுக்கிதனால் என்ன நேரிட்டாலும்அக்கரையில்லை. எங்களில் 3000, 4000 ஆசாமிகளை ஒரே சமயத்தில் சிறை பிடிப்பது ஆங்கில உத்தியோகஸ்தர்களை திக்குமுக்கடையச் செய்யும் துரைத்தனம் நடத்தலுக்கு இடஞ்சல் செய்வதாலும், வியாபாரத்தை வேறுவழியில் திருப்புவதாலும் எங்களுக்குச் செய்யப்பட்டிருக்கும் அநியாயங்களுக்கு இங்கிலாந்தின் கவனத்தை செலுத்தும்படி செய்வோம். ரயில்களாலும், இராஜாங்க பாலனையாலும், கல்வியாலும்—நாங்கள் நினைக்காதபலவழிகளில் இங்கிலாந்து எங்களுக்குள்ஒற்றுமையைஉண்டாக்கிவிட்டது. அவர்கள் எங்களைநசுக்கவும் கசக்கவும் எங்களுக்கு ஐக்கியம் அதிகப்படுகிறது. எங்கள் நோக்கம் சில தலைமுறைகளுக்குப் பின்தான் பூர்த்தியாய்

நிறைவேறும். ஆயின் எங்கள் முன்பிரமாதமான (இலக்ஷ்யம்) இருக்கிறது. அதினின்றும் எங்கள் கண்களை அப்புறப்படுத்தோம்.

திலகரின் பாஷாநடை.—நடையை அவர் புஸ்தகங்கள் பத்திரிகைகளில் எழுதும் வியாசங்கள், பிரசங்கங்கள், முதலியவைகளிலிருந்து நாமறிந்து கொள்ளலாம். அவர் முக்கியமான ஒரு கொள்கையைக் கொண்டவர். சிலர் சொல்லும் அல்லது எழுதும் மாதிரியை மட்டும் அதிகமாய் கவனிப்பதும், சொல்லும் அல்லது எழுதும் சமாசாரத்தை சாதாரணமாய் கவனிப்பதுமா யிருக்கிறார்கள். வேறு சிலரோ சமாசாரத்தின்மேல் கவனத்தை முழுவதும் செலுத்துகிறார்கள்; சொல்லும் மாதிரி அவர்களுக்கு அக்கரையில்லை. திலகர் பின் வகுப்பாரைச் சேர்ந்தவர். அவருக்கு வேண்டியதெல்லாம் அவர்சொல்வது வெள்ளையாய் பலரும் அறிந்து கொள்ளக்கூடியதாயும், ஒரு அர்த்தமுள்ளதாயும் இருக்கவேண்டுமென்பதே. சிலர் இரண்டர்த்தம் கொள்ளக்கூடியதாய் சமத்காரமாய்ப் பேசுவது வழக்கம். தமிழ் இலக்கணத்தில் கூறப்பட்டிருக்கும் சுருங்கச்சொல்லல், போன்ற பத்து இலக்ஷணங்கள் இவரிடத்தில் காணலாம்.

இவர்கருத்தும் விசேஷ நடைக்காரர்கள் புகழவேண்டுமென்பதல்ல. தாம் சொல்வதைக் கேட்பவர்களுக்கு தாம் சொல்வது சரியாய் அர்த்தமாய் அவர்கள் மனதில் நன்குபதியவேண்டுமென்பதுதான். சிவாஜி கொண்டாட்டகாலத்தில் சென்றவருஷம் அவர்பேசின பேச்சைப் படிக்கப்படிக்கசலிக்கிறதில்லை. அதில் ஒருவாக்கியமும் அடுத்த வாக்கியமும் சங்கலி போட்டுக் கட்டப்பட்டிருக்கின்றன. திலகர் சொல்வதையோ பேசுவதையோ அரை குறையாய்ப்படிப்பதில் பிரயோஜனமே கிடையாது. அவரின் அபிப்பிராயம் சரியாக வெளியாகாது. அவரிடம் நளினரசமே கிடையாது. நளினரசத்துக்கும் அவருக்கும் அதிகதூரம்.

## சிவாஜிக் கொண்டாட்டம்.

சென்ற வருஷம் (1907) திலகர் அந்த சமயத்தில் மராத்தி பாஷையில் பேசிய பேச்சின் சாராம்சம் ஆங்கிலப்பத்திரிகையாகிய மராட்டாவில் வெளியானதிலிருந்து ஒரு பாகத்தை வெளிப்படுத்துகிறோம். இதிலிருந்து அவர் நடை முதலானவற்றை நாம் நன்கு அறிந்துகொள்ளலாம்.

"இந்த வருஷம் நாம் கொண்டாடுவது 11-வது முறையாகும். இரண்டாம் கொண்டாட்டம் நடந்தபின் இந்தசிவாஜிஸ்தாபனம் பயங்கரமான ஊழிக்காற்றில் உழன்றது. தெய்வ சங்கல்பத்தாலும் கருணையாலும் அதனால் பேராபத்து நேர்ந்தும் அது அத்துடன் ஒழிந்துபோகாமலிருக்கிறது. இந்த வருஷத்தில் கலவரம் ஏற்படும் என்ற பயம் பலமாயிருந்தது. இல்லையோ இவ்வுற்சவத்தின் காரணத்தை தப்பெண்ணங்கள் சொல்லிக்கெடுக்கமுயற்சிகள் இருக்குமென்றிருந்தோம். துஷ்டர்களின் நோக்கம் ஜனங்களின் புத்தியினால் நிறைவேறாது போனதைப்பற்றி எனக்குச் சந்தோஷமே. இதுபோன்ற உற்சவங்களின் கருத்து கலவரத்தை உண்டுபண்ணவல்லவென்று இவ்வளவு காலத்துக்குப் பின்னும் துரைத்தனத்தார் அறியாதிருப்பதானது விசனிக்கத்தக்கதே. காரணமில்லாத சந்தேகமானது அவர்கள்மனதைக் கவர்ந்துகொண்டிருக்கிறது. இந்தக்கூட்டத்தில் தப்பறிபவர்களும், பத்திரிகைக்குக்குறிப்பு எழுதுவோரும் விஷயம் சேர்ப்போரும் 10, 12 பேர்கள் வந்திருக்கிறார்கள். இப்பொழுது இந்த சமயத்திற்கும் அவநம்பிக்கைக்கும் அவசியமென்ன? நமது ஜில்லா மாஜிஸ்திரேட்டு இங்கு வரவில்லையே யென்று விசனிக்கிறேன். இதுபோன்ற சமயங்களில் ஆஜராய் சிவாஜி உற்சவஸ்தாபனர்கள் உண்மையாய் என்ன சொல்கிறார்கள் என்று தாமே நேரில் கேட்டறிய தக்கமான சமயத்தை அவர் ஏன் சும்மா விடவேண்டும்? நான்சொல்லக்கருதியிருக்கும் ஒவ்வொருவார்த்

தையும் கவர்னர்முன்புகூடசொல்லத்துணிந்திருக்கிறேன். ஏன் ?கடவுள் சந்நிதானத்தில்கூடச்சொல்வேன். மனப்பூர்வமாய்மனதிலுள்ளதைதாராளமாயும்வெளிப்படையாயும்,கபடமில்லாமலும் நான் சொல்வேன் ஏன்? அவசியமானுல் கூரைமீது நின்றும் பகிரங்கமாய்ச் சொல்வேன். துப்பறியுமொருவர் என்னிடம் வந்து என்னுேக்கங்களைக்கேட்டால் இதையேதைரியமாய்ச் சொல்வேன். திருட்டுத் தனமாயும் ரகசியமாயும் அபிப்பிராயம் வெளியிட சமயமேயில்லை. இருந்தாலும் அச்சமயம் எனத்திற்கு? இதுமட்டும் உண்மை. இந்தியர்கள் தங்கள் தேசத்தில் திருடர்களல்ல. தாங்கள் ஆசைப்படும்விஷயங்களை பகிரங்கமாய்ச் சொல்லலாம். அப்படி உண்மையாய் செய்யவேண்டியது அவர்கள் கடமையாகும். ஒருவர் நான் சொல்வதைக் கேட்டுச் செல்வதற்காக பயப்படுவதில்லை. நாங்கள் விரும்புவது நடுவு நிலைமையாயிருந்து முழுவதும் பிரசங்கத்தைக் கேட்பதே. பேசுபவர் பேச்சிலிருக்கும் பிரத்தியேகமான அல்லது அஜாக்கிரதையான ஒருவார்த்தையை, கண்டுபிடிக்கும்நோக்கமுடையவரின் இழிவானகுணத்தையும் முயற்சியையும், இதைக்கொண்டு பேசுபவரைக்குற்றவாளியாக்கிதண்டிப்பதற்கு படும் சிரத்தையையும் நான்பலமாய்இழித்துரைக்கிறேன் துரைத்தனத்தார்உண்மை அறியவிரும்புவாராயின் உண்மை முழுவதையும் கேட்கத்தயாராயிருக்கட்டும். ஏன் இரண்டு இலக்ஷம்ரூபாய் சுருக்கெழுத்து எழுதுபவர்களுக்கும் துப்பறிபவர்களுக்கும் கொடுப்பதால் சிலவழியவேண்டும்?

இந்தப்பணத்தைத்தொழிற்கல்வியில்சிலவழித்தல்எவ்வளவோ சிறப்பானது நாங்கள்சிவாஜிஉற்சவங்கொண்டாடுவது கலகத் தவஜத்தைப் பிடிப்பதற்காகவல்ல. இந்த நோக்கம்மௌட்டிக மானது.அசம்பாவிதமானது, எங்களிடத்தில் ஆயுதம், மருந்து ஒன்றுமில்லையே. இதைநாங்கள்அறியாதவர்களல்ல பிரிடிஷா ரின் இராணுவபலம் அபாரமானது, நிமிஷத்துக்கு 100 குண் டுகள் பிரயோகிக்கும் பாரி பீரங்கி உங்கள் பிரமாதமான கூட்டத்துக்குப் போதுமானது. படித்தவகுப்பார் புலனுக் குப் படாத விஷயங்களை எப்படி துப்பறிபவன் கண்டுபிடிக்க முடியும்? இப்படி துப்பறிபவர்களால் நிழலைப்போல் துட ரப்படுவோர் சகலத்தையும் நோக்கின்றிக் கண்டுவரும் கடவுள் ஜனங்கள் துப்பறிபவர் என்ற எண்ணத்தால் மனதைத்திருப் திசெய்து கொள்ளலாம். அவர் அரசனையும் துரைத்தனத் தையும் கவனித்துக்கொண்டிருக்கிறார். இந்தத் துப்பறியும் மேலான கடவுள் பிரிடிஷ் துரைத்தனத்தில நியாயத்தை இன்று இல்லாவிட்டால் நாளையாவது ஸ்தாபிப்பார். இவ்வ ளவு விஷயத்துக்கும் இரகசியம் 'துரைத்தனத்தாரின் விரோ திகள் படித்த வகுப்பார்.' என்றதப்பு எண்ணமே. இதை வெளிப்படையாய் மார்லி துரை அப்படியே சொல்லி விட் டார். பாமர ஜனங்களொவ்வொருவரும் படித்தவர்கள்சொ ல்வதொவ்வொன்றும் சரியென்று சொல்வதில்லை என்பதை பிரமாதமாகச் சொல்கிறார். ஒவ்வொரு மிலேச்சனும், காட் டாளும், படியாதவனும்நம்உத்தியோக நிர்வாகிகளின் இராஜ

தந்திரத்தின் ஆளத்தை அறியத்திறமையுள்ளவர்களா? படித் தவகுப்பார் விரோதிகள் என்று சொல்ல அவர்களிடம் என் னகண்டாரோ மார்லி துரை? அவர்களுக்கிருக்கும் அறிவா அவர்களை அப்படி மாற்றிவிட்டது. அதுவல்லமையாயின் நானே அறிவுக்கு ஜன்மவிரோதி. கிறிஸ்தவர்கள் சொல்லும் பிரகா ரம் ஆடம் என்பான் அறிவு என்னும் மரம் காய்த்த பழத்தை சாப்பிட்டுக்கெட்டான், தொந்திரவுக் குள்ளானான். அவன் போல் படித்த இந்தியர்கள் அவர்கள் பாக்கியத்தால் பெற்றி ருக்கும் அறிவால் துன்பத்துக் குள்ளாகிறார்கள். இந்த உல கத்தில் அறிவை வெறுப்பவர்கள் கூழாத்தைச்சேர்ந்தவர்களா நமது துரைத்தனத்தார்?

சிவாஜி உற்சவத்தைப்பற்றிப் பேசுவோம். சிவாஜியைப் பற்றி எங்களுக்குத் தெரிந்தவைகள் அல்லது நாங்கள் தற்சம யம் ஜனங்கள் மனதில் பதிய சொல்ல விரும்புதல் இவைகள் தான் சிவாஜிநடந்துக்கொண்டமாதிரிநடக்க வேண்டுமென் பதல்ல எங்கள் அபிப்பிராயம். சமயத்துக்கும் காலத்துக்கும் பொருத்தமான படி அவர் கைக்கொண்ட வழிகளுடையவும் தந்திரங்களுடையவும் உண்மையை அறிந்து அவர் சாமர்த்திய த்தை புகழ்வதற்கே இதுபோன்ற உற்சவங்கள். தேசத்தின் புராதனபெருமையைஅவர்கள்ஞாபகத்துக்குக் கொண்டுவருவ தால் ஜனங்களுக் கிருக்கும் கிரமமான ஆசைக்கு ஒரு தூண்டு கோலா யிருக்கின்றன. இவைகளால் அவர்களுக்கு ஊக்கமும்

தைரியமும் விடாமுயற்சியும் உண்டாகின்றன. கஷ்ட காலங்களில் அவர்கள் கைக்கொள்ளும் வழிகளால் அவர்கள் ஜயம் பெருவதும், இதை உண்மையாய் அறிவதால் தைரியம் அடைவதுமுண்டாகின்றன. ஏக்கத்துக்குச்சரியானமருந்துஇது ஊக்கம் முயற்சி ஆகிய விதைகளுக்கு இவைகள் எருப்போலுதவுகின்ன. இதபோன்றசமயங்களில் சேரும்ஜனங்களுக்குதுவேஷமும், துஷ்டத்ரனமும் எண்ணமல்ல. இந்த விஷயத்தில் நான் சொன்ன தொவ்வொன்றும் கறர்தபால் கறர்ததுபோல் பத்திரிகைகளில் பிரசுரமாக வேண்டுமென்பது என்விருப்பம். அறிக்கையானது பத்திரிகைகளில் பிரசுரிக்குமுன் திருத்தத்துக்கு என்னிடம் வந்தால் நான் விட்டவைகளைக் குறிக்கிறேன் சட்டமீறி நடப்பதற்கு காலம் இன்னும் வரவில்லை. ஏனெனில் கிரமமானதும், சட்டத்துக்கு சரியானதுமான வழிகள் இன்னும் சில இருக்கின்றன. சட்டரீதியான நடவடிக்கைகளைக் கூட கவர்ன்மெண்டார் சட்டக்கேடானதென்று எண்ணுவது விசனிக்க தக்கது. லாலா லஜபதி ராய் பாருங்கள் அவர் சட்ட விரோதமான தொன்றும் செய்யவில்லை யாயினும், உத்தியோகஸ்தர்களெல்லாம் ஒருங்கு திரண்டு யோசனைசெய்து, கடலேத்தி விட்டார்கள். பிரிடிஷ் கவர்ன்மெண்டாரின் பெருந்தன்மை கெட்டுவருகிற தென்பதற்கு இதைவிடவேறு விசிதமான குறி ஒன்றும் வேண்டுவதில்லை. அழிவும் இழிவும் ஆரம்பித்துவிட்டது மார்லி பெரிய பண்டிதர் மெத்தப்படித்தவர். இதை மறந்துக் கூற முடியாது. கல்விக் கடலாகிய இவர்

பெரிய ஆங்கில வித்வான், காசியிலிருக்கும் பூராவைதீக பண்டிதர்களைவிட சிரேஷ்டமானவராகத் தெரியவில்லை. அவர்களுக்கு உலகமென்பதே தெரியாது. இவரும் அந்த கோஷ்டிக்காரர்தான். எவ்வளவுக்கெவ்வளவுபடிப்பு ஜாஸ்தியாயிருக்கிறதோ அதற்கு தக்கபடி இராஜரீகத்தில் குறைவிருக்கிறது அசம்பாவிதம். படித்தவர்கள் ஏழைகளாயிருக்கிறார்களென்று மார்லி ஏளனம்செய்கிறார். மார்லி தாம் முன்னிருந்ததை மறந்துவிட்டாரோ? உயர்ந்தஉத்தியோகத்துக்குவரபடித்த இந்தியாயமாய் பிரியப்படலாம். ஆங்கிலப்பண்டிதர் இராஜாங்க முக்கிய காரியதரிசி உத்தியோகத்துக்குப் பிரியப்படலாம். இது குற்றமானால் நாம் ஆசைப்படுவதும் குற்றமே. இந்திய ஜனங்களை அவர் பாகுபடுத்திக் கூறுவது மிக்க ஆச்சரியமாயிருக்கிறது, அவர் பிரபுக்களையும், அரசர்களையும் தம்பக்கம் சேரும்படி ஏவுகிறார். உண்மையில் இதைப்பற்றி நாம் ஆச்சரியப்பட வேண்டியதில்லை. ஏனெனில் நாம் அரசர்கள் பொம்மைகள். பிரிடிஷ் துரைத்தனத்தார் வார்த்தையிலிருக்கிறது இவர்கள் அரசாயிருப்பது."

மும்மூர்த்திகள்.—சுதேசிய கொள்கை இரண்டு மூன்று வருஷங்களுக்குள் அடைந்திருக்கும் அபூர்வ அதியாச்சரிய விருத்திக்குக் காரணம் மூவர். மூவர் மூன்று மாகாணத்தைச்சேர்ந்தவர்கள். பம்பாயைச்சேர்ந்தபால

கங்காதர திலகர், பங்காளத்தைச் சேர்ந்த பிபின் சந்த்ரபாலர், பஞ்சாபைச்சேர்ந்த லாலா லஜபதி ராய். சாதாரணமாய் மூவர்களையும் பால், லால், பால், (Bal, Lal, Pal,) என்று வழங்கி வருகிறார்கள். திலகர் ஒவ்வொரு விஷயத்தையும் நூதனமாய் சிந்திப்பவர். சந்த்ரபாலர் இவரின் சித்தாந்தங்களை பிரசங்கங்களாலும், வியாசங்களாலும் பிரபலப்படுத்துபவர். லஜாபதி ராய் தடிபோல் இருந்துழைப்பவர். இம்மூவர்களால் தான் நமக்கு நல்லகதி கிடைக்கப்போகிறதென்று சுதேசியக்கட்சியாரின் பூரண நம்பிக்கை. இதைப்பற்றி ஒருவரும் ஒன்றும் உறுதியாய் சொல்ல முடியாது. நாளாவட்டத்தில் இது தெரியவேண்டும். எவரும் இவர்கள் மூவரும் பாரதமாதாவின் தொண்டர் சிகாமணிகள் என்பதை மறுக்கார். இம்மகான்கள் பெருத்த இலக்ஷ்யமாகிய சுயராஜ்யம் கிடைக்க உழைக்கிறார்கள் கடவுள் அவர்களுக்கு தேக பலத்தையும் மன உல்லாசத்தையும் கடாட்சிக்கட்டும். ஓம்தத்சத்.

---

நமது நண்பர் சொல்லிய

பன்னிரு சீர்க்கழி நெடிலடி யாசிரிய விருத்தம்.

செங்கதிர்ச் செல்வனருள் செம்மன்முறை வழுவாது
தீமையங் கையுமோம்பியே
செங்கோ ணடாத்தியிசை திசைதிசை பரம்பிடச்
செய்துதெவ் வினையடக்குந்
திங்கள்மர பினில்வரும் பரசனு மத்தினிற் செறியுமிவ்
வண்டத்தினிற்
தீரனு யாரியர் சாரநெறி மேர்ந்துபிற தேயத்தின்
பொருளோவியே
பொங்குசிர் நம்பொருள் பொலிந்து மல்கிடுமாறு புந்தி
புசலுங்குரவனுய்ப்
புன்மைபல வந்துறினு மஞ்சாத நெஞ்சனுய்ப்
புரிகொடுஞ் சிறையிருந்தும்,
சிங்கலற நம்பொருள்க டேசமெங் குஞ்செறிவு
செய்கவந்தேமாதரம்
செப்பிவாழ்த் திச்சிறை தவிர்ந்தடில் லாக்கெனுஞ்
சிரியோன் வாழ்கமன்னே.

**வந்தேமாதரம்.**

முற்றிற்று.

# பிழை திருத்தம்.

| பக்கம். | வரி. | பிழை. | திருத்தம். |
|---|---|---|---|
| ii | 5 | அன்புக்குறிமை ... | அன்புக்குரிமை. |
| ... | 11 | வாதமாகாது ... | வாதமாகா. |
| .. | 13 | மூதலில் ... | முதலில். |
| xiii | 18 | தொகுத்தருக்கு ... | தொகுத்தவருக்கு. |
| ... | 19 | கோலாயி ... | கோலாயிருந்தன. |
| ... | 20 | சொல்லப்புகல் ... | சொல்லம்புகள். |
| xv | 3 | நாமகட்கும் ... | நாமகட்குப். |
| 20 | 1 | பிரமுகனுயி ... | பிரமுகமாயிருந்த. |
| .. | 21 | மேற்கோள் ... | மேற்கோள்கள். |
| 21 | 7 | அதை ... | அவைகளை. |
| 52 | 16 | போதுமானது ... | போதுமானவை. |
| 57 | 9 | சுதேசத்தை ... | சுதேசியத்தை. |
| ... | 11 | பயங்காளியா ... | பயங்காளிகளா. |
| ... | 13 | வேண்டுவேவது ... | வேண்டுவது. |
| 59 | 6 | முன்யோசனை ... | முன்யோசனை. |
| 60 | 4 | வெவ்வேறானவை ... | வெவ்வேறானவை. |
| 63 | 9 | பரிஷ்காரம் ... | பஹிஷ்காரம். |
| 64 | 5 | அதை ... | அவைகளை. |

பக்கம் 30 வரி 10 (இதை............பார்க்கலாம்) புட்நோட்டாகக் கொள்க.

ஷை வரி 6 பண்டிதர்களால் பின் 'பிரசங்கம்' என்பதை சேர்த்துக்கொள்க.